உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



# திருவெண்காட்டுத் தல வரலாறு

[தேவாரப் பதிகங்களுடன்]

தருமபுர ஆதினம்

கீழ்த்திசைப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்,

திருவெண்காடு,

வித்துவான், **திரு. மு. ஆறுமுக தேசிகர்** அவர்களால்

எழுதப்பெற்றது.




திருவெண்காடு

ஸ்ரீ சுவேதாரண்யேசுவர சுவாமி தேவஸ்தான வெளியீடு

பதிப்புரிமை பெற்றது] 1955 [விலை அணா 0—6—0

முதற் பதிப்பு 1942
இரண்டாம் பதிப்பு 1945
மூன்றும் பதிப்பு 1947
நான்காம் பதிப்பு 1955

உ

# முகவுரை

சென்னை இந்துமத அறநிலையப்பாதுகாப்புக் கழகத்தினர் தேவஸ்தானங்களுக்கு அனுப்பியிருக்கிற சுற்றறிக்கைக்கு ஏற்பத் **திருவெண்காட்டுத் தலவரலாறு** என்னும் இச் சிறுநூல் தலபுராணத்தைத் தழுவி எழுதப்பட்டிருக்கிறது. சென்னை, வித்துவான், திரு. S. இராமலிங்க தேசிகர் அவர்கள் இந் நூலுக்கு முதற்குறிப்புகள் எழுதிக்கொடுத்தும், சென்னை, சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி, திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் B. A., B. L., அவர்கள் கல்வெட்டு ஆராய்ச்சிக் குறிப்புகள் எழுதிக்கொடுத்தும் உதவியுள்ளார்கள். இவ்வரிய தொண்டில் என்னை யீடுபடுத்திய ஸ்ரீ சுவேதாரண்யேசுவரசுவாமி தேவஸ்தான டிரஸ்டி, திரு. T. G. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கு எனது நன்றி உரியதாக.

இங்ஙனம்,

திருவெண்காடு, 20—12—42.

**தருமபுர ஆதீன நூல் நிலையப் பரிசோதக**
**வித்துவான்: மு. ஆறுமுகதேசிகர்.**

## இரண்டாம் பதிப்பின் முகவுரை.

முதற்பதிப்புப் பிரதிகள் செலவழிந்து விட்டபடியால் தேவஸ்தானத்திற்கு எழுந்தருளும் பக்தர்களின் வேண்டு கோட்கிணங்கி இந்த இரண்டாம் பதிப்பு சிற்சில மாறுதல் களுடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

இங்ஙனம்,

திருவெண்காடு, 19—9—45.

**P. சுப்பிரமணியச்செட்டியார்,** B. A., L. T.,
தேவஸ்தான டிரஸ்டி.

## மூன்றும் பதிப்பின் முகவுரை.

இரண்டாம் பதிப்புப் பிரதிகள் செலவழிந்துவிட்ட படியால் தேவஸ்தானத்திற்கு எழுந்தருளும் பக்தர்களின் வேண்டுகோட்கிணங்கி இந்த மூன்றும் பதிப்பு சிற்சில மாறுதல்களுடன் வெளியிடப்பட்டிருக்கிறது.

திருவெண்காடு, 20—11—47

இங்ஙனம்,
**M. C. கல்யாணசுந்தரம்பிள்ளை B.A., B.L.,**
**தேவஸ்தான டிரஸ்டி.**

## நான்காம் பதிப்பின் முகவுரை.

மூன்றும் பதிப்புப் பிரதிகள் செலவழிந்து விட்டபடியால் தேவஸ்தானத்திற்கு எழுந்தருளும் பக்தர்களின் வேண்டு கோட்கிணங்கி இந்த நான்காம் பதிப்பு வெளியிடப்பட்டிருக் கிறது.

இங்ஙனம்,

**N. சிவராமன்,**
*நிர்வாக அதிகாரி.*

**S. சுப்ரமண்யபிள்ளை.**
Chairman, Board of Trustees.

**தேவஸ்தானம் ஆபீஸ், திருவெண்காடு 22—5—55.**

**T. N. துரைசாமி அய்யர், B. A.,**
**V. ஜெம்புகேசநாடார்,**
*டிரஸ்டிகள்.*

உ

சிவமயம்

*திருக்கயிலாய பரம்பரைத்*

தருமபுர ஆதீனச் சைவப் பிரசாரகர், குறுக்கை,

**திரு. மீ. சுந்தரம்பிள்ளை அவர்கள்**

அளித்த

## சிறப்புப்பாயிரம்

உலகுநிறை உயிரெவைக்கும் உளத்துநினை கருத்தெவையும்
முற்றுவிக்கும் பெற்றியதா முக்குளஞ்சேர்
திலகமெனும் பதிஇதெனத் திருஞான சம்பந்தர்
மலர்வாயால் இசைத்ததிரு வெண்காட்டிற்
பலபுகழ்சேர் வேயனதோ ளுமைபங்கன் வானோர்க்கும்
ஏனோர்க்கும் பரிந்தருளும் சரிதத்தை
இலகுதமிழ்ச் சொற்பெருக்கிற் கத்தியமா யினிதுரைத்தான்
அறுமுகப்பேர்த் தேசிகனுந் தமிழ்வலோனே.

# பொருளடக்கம்




| | | பக்க எண் |
|---|---|---|
| 1. | தலமும் இருப்பிடமும் | 1 |
| 2. | தலத்தின் வேறுபெயர்கள் | 2 |
| 3. | கோயில் | ,, |
| 4. | மூர்த்திகள் | 3 |
| 5. | தீர்த்தங்கள் | 4 |
| 6. | தலவிருக்ஷங்கள் | 5 |
| 7. | தலப்பெருமைகள் | 6 |
| 8. | நித்திய பூஜைகளும், திருவிழாக்களும் | 11 |
| 9. | சுற்றுக் கோயில்கள் | 14 |
| 10. | வழிபட்டோர்கள் | 14 |
| 11. | திருப்பணிகள் | 15 |
| 12. | வருமானமும், கட்டளைகளும் | 15 |
| 13. | நிர்வாகம் | 16 |
| 14. | கல்வெட்டுகள் | 16 |
| 15. | சமயப்பணி | 18 |
| 16. | கட்டணங்களின் விபரம் | 19 |
| 17. | தலத்தைப்பற்றிய நூல்கள் | 19 |
| 18. | திருப்பாடல்கள் | 21 |

1 சுவேதாரண்யேசுவரர்
2 பெரியவாரணப்பிள்ளையார்
3 சோமாஸ்கந்தர்
4 பத்ரகாளி
5 அகோரமூர்த்தி (மூலவர்)
6 நடராஜர்
7 அகோரமூர்த்தி (உற்சவர்)
8 துர்க்கை
9 நவக்கிரகம்
10 மடைப்பள்ளி
11 பிள்ளையிடுக்கி அம்மன்
12 ஆடிப்பூர அம்மன்
13 பள்ளியறை
14 புதன்
15 முருகன்
16 பிர்மவித்தியா நாயகி
17 சந்திர தீர்த்தம்
18 நந்தவனம்
19 யாகசாலை
20 வடவால விருக்ஷம்
21 சந்திரேஸ்வரர்
22 கொன்றை விருக்ஷம்
23 நூற்றுக்கால் மண்டபம்
24 களஞ்சியம்
25 காரியாலயம்
26 நந்தவனம்
27 சூரிய தீர்த்தம்
28 சூரியேஸ்வரர்
29 அக்னி தீர்த்தம்
30 நந்தவனம்
31 அக்னீஸ்வரர்
32 ஊஞ்சல் மண்டபம்
33 உற்சவ மண்டபம்
34 நந்தி, பலிபீடம்
35 கிணறுவடிமான தீர்த்தம்
36 பிரம சமாதி.


கிழக்கு
Flower garden
18
Banian Tree
Chandra Theertham
17
Sri Amman Koil
16
Agni Theertham
29
Flower garden
30
Soria Theertham
27
Flower garden
26
Store Room
24
மேற்கு

திருக்கோயில் அமைப்பு

உ

சிவமயம்.

# திருவெண்காட்டுத் தலவரலாறு

திருச்சிற்றம்பலம்

வேத நாயகன் வேதியர் நாயகன்
மாதின் நாயகன் மாதவர் நாயகன்
ஆதி நாயகன் ஆதிரை நாயகன்
பூத நாயகன் புண்ணிய மூர்த்தியே.

திருச்சிற்றம்பலம்

## 1. தலமும் இருப்பிடமும்

உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனி பேதம் நிரைசேரப் படைத்து, அவற்றின் உயிர்க்குயிராய் நின்றருளும் இறைவன், தம்மை ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் வண்ணம் திருமேனி தாங்கித் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பற்பலவற்றுள்ளும் நாதாந்தத்தொளியாய் யுகாந்த காலத்திலும் கனலாலும் காற்றாலும் கலப்புறாது விளங்குவது **திருவெண்காடு** என்னும் இத் தலமாகும். இதன் வடமொழிப்பெயர் சுவேதாரண்யம் (சுவேதம் = வெண்மை. ஆரண்யம் = காடு.) திருப்பதிகங்கள் பெற்ற தலங்கள் 274 என்று கணக்கிட்ட ஸ்ரீ உமாபதிசிவாசாரியார் இதனை 11வது தலமாக அமைத்து எண்ணியுள்ளார்கள்.

இத்தலம் தஞ்சைஜில்லா சீகாழித் தாலூகாவில் சீகாழிப் புகைவண்டி நிலையத்திலிருந்து தென்கிழக்கே சுமார் 7 கல் தொலைவிலுள்ளது. காவிரியாற்றிற்கும், மணிகர்ணிகை ஆற்றிற்கும் இடைப்பட்டது. திருச்சாய்க்காடு, திருப்பல்லவனீச்சரம், ‡ திருவலம்புரம், திருக்காட்டுப்பள்ளி, $ திருக்கலிக்காமூர் முதலிய தலங்களால் சூழப்பெற்றது. சீகாழியிலிருந்து மட்சாலையொன்று செல்கின்றது. இதுவே இத்தலத்திற்கு நேர்வழியாகும். மற்றும் வைத்தீஸ்வரன்கோயில் (புள்ளிருக்குவேளூர்), செம்பொனார்கோயில், ஆக்கூர் முதலிய புகைவண்டி நிலையங்களில் இறங்கியும் மட்சாலை வழியாகச் செல்லலாம். தலயாத்திரை செய்வோர் தங்குவதற்கு வசதியாகப் பல சத்திரங்களும், மடங்களும் உள்ளன. இதன் அருகே திருநாங்கூர், திருநகரி எனும் வைணவத் தலங்கள் இருக்கின்றன.

## 2. தலத்தின் வேறுபெயர்கள்

இத்தலத்திற்கு வேதவெண்காடு, முத்திநகர், தமோநாசபுரம், முருகன்பூண்டி, பாதாளகயிலாயம், ஞானவனம், சிவானந்தக்காடு, கணபதிநகரம், ***ஆதிசிதம்பரம்***, திருவூர், உமையூர், மாலூர், தலநாயகம், பெரியமயானம், பேரரங்கம், தருமகோடி, சித்திநகர் முதலிய பல பெயர்களும் உள என்த் தலபுராணம் கூறுகின்றது.

## 3. கோயில்

கோயில் ஊருக்கு நடுவில் வெகு அழகாக அமைந்திருக்கின்றது. திருவீதியும், மடவளாகமும் உள்ளிட்டு 5 திருச்சுற்றுலைகள் (பஞ்சப்பிராகாரங்கள்) உள்ளன. கீழ்பாலும், மேல்பாலும், உட்பிராகாரத்திற்கு இரண்டு கூடகோபுரங்கள் அமைந்து அழகு செய்கின்றன. வெளிப் பிராகாரத்திற்கும் இரண்டு ராஜகோபுரங்கள் இருக்கின்றன. கோபுரங்களும், மதில்களும் நாகரிகம் வாய்ந்த புராதன சிற்பங்களாற் சிறந்து விளங்குகின்றன. புராண வரலாற்றுச் சிற்பங்களும் புதிய முறையிலே காட்சி அளிக்கின்றன. சுற்று மதில்கள் கருங்கல், செங்கல் திருப்பணி. கோயில் கிழக்கு மேற்கில் 792 அடி, தெற்கு வடக்கில் 310 அடி.

---

‡ மேலப்பெரும்பள்ளம் $ அன்னப்பன்பேட்டை

கோயிலினுள் வடமேற்குப் பாகத்தில் அம்மையார் ஆலயம் தனித்து இருக்கின்றது. அதன் சந்நிதானத்தின் வெளியில் வடபுறம் நவக்கிரகங்களுள் ஒன்ருகிய புதனுலயமும், அதன் வடபால் பிரமசமாதியும், வில்வ விருக்ஷமும் உள்ளன. வடகிழக்கு மூலையில் யாகசாலையும், தென்மேற்கு மூலையில் தேவஸ்தான காரியாலயமும் அமைந்திருக்கின்றன. காரியாலயத்திற்கும் அம்மையார் கோயிலுக்கும் இடையில் முருகன் ஆலயம் அமையப்பெற்ற நூற்றுக்கால் மண்டபம் இருக்கின்றது.



**நூற்றுக்கால் மண்டபமும், முருகன் ஆலயமும்.**

சுவாமி கோயிலும் அம்மையார் கோயிலும் கிழக்குப் பார்த்த சந்நிதிகளே.

## 4. மூர்த்திகள்

இத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர் திருநாமம் **சுவேதாரண்யேசுவரர்.** அம்மையார் திருநாமம் **பிர்மவித்தியா நாயகி.** தலவிநாயகர் **பெரியவாரணப்பிள்ளையார்.** இவைகளோடு **அகோரமூர்த்தி, சட்டைநாதர், மெய்கண்டார்,** சோமாஸ்கந்தர், அறுபான்மும்மை நாயன்மார், தக்ஷிணமூர்த்தி, துண்டி விநாயகர், காட்சிவிநாயகர், காசிவிசுவேசுவரர், **காளி,** துர்க்கை இலக்குமி, கலைமகள் முதலிய திருவுருவங்களும், சோமேசர், அக்னீசர், சூரியேசர், ஐராவதீசர், சுவேதகேதீசர், வருணேசர், கணபதீசர், வியாதேசர், சிவப்பிரியேசர், சுவேதேசர் முதலிய

எண்ணிறந்த சிவலிங்க மூர்த்திகளும் உள்ளன. ஆதிசிதம் பரம் என்னும் பெயருக்கேற்ப, தில்லைச் சிதம்பரம்போலவே நடராஜர் முன்பு பெருமாள் சந்நிதானமும் முன்பு இருந்த தாகத் தெரிகிறது. இப்பொழுது அவ்விடத்தில் சோமாஸ் கந்த உருவம் இருக்கிறது.

பெருமானின் திருவுருவம் சோமாஸ்கந்தருக்குப் பின்புறம் திருமாளிகைப்பத்தியில் எழுந்தருளியாகி இருக்கிறது. அதன் திருநாமம் **சுவேதவனப் பெருமாள்.** நடராஜர் ஆலயம் சிதம் பரம்போலவே ரஹஸ்யம், சபைகள் முதலியவைகளுடன் அமைந்துள்ளது. அம்மையார் சந்நிதானத்தின் வடபால் **புதன்** எழுந்தருளியிருக்கின்றார். நூற்றுக்கால் மண்டபத்தி லுள்ள முருகப்பெருமான் அறுமுகங்களுடன் மயிலின்மீது, எழுந்தருளிய திருக்கோலமாய்க் காட்சியளிக்கின்றார். நவக் கிரகங்கள் வக்கிரமாக இல்லாமல் ஒரே வரிசையாக அமைந் துள்ளன. இவையன்றி ஆலயத்தைச்சுற்றிலும் வெளியே ஆரண்யேசுரர், திருப்புலீச்சுரர், அரகரேசுரர், நாகேசுரர் முதலிய பல மூர்த்திகளும் எழுந்தருளியாகி இருக்கின்றன.

## 5. தீர்த்தங்கள்

"வெண்காட்டு **முக்குளநீர்** தோய்வினையார் அவர் தம்மைத் தோயாவாந் தீவினையே" "**முக்குளம்** நன்குடையானும் முக்க ணுடை இறையவனே" என்றார் திருஞானசம்பந்தர். உமா தேவியாரது வேண்டுகோட்கிணங்கி இறைவன் நிருத்தஞ் செய்யுங்கால் முக்கண்களினின்றும் மூன்று துளிகள் சிந்தின என்றும், அம் மூன்றும் விழுந்த இடமே முக்குளமாய் விளங்கு கின்றன என்றும், மற்றொரு யுகத்தில் அகோரசிவனார் விழித்து நோக்குஞ் சமயத்தில் அவரது முக்கண்களினின்றும் சிந்திய முத்துளிகளும் முன்னைய முத்தீர்த்தத்தில் தனித்தனியே சென்று கலந்தன என்றும் புராணம் கூறுகின்றது. இம் மூன்றும் **அக்னி தீர்த்தம், சூரிய தீர்த்தம், சந்திரதீர்த்தம்** எனப் பெயர்பெற்று விளங்குகின்றன.

அக்னி தீர்த்தம், சுவேதாரண்யேசுவரர் திருமுன்பு சிறிது தென்புறம் அமைந்துள்ளது. இதன் கரையில் அக்னீசர் எழுந்தருளியிருக்கின்றார்.

சூரிய தீர்த்தம், அக்னி தீர்த்தத்தின் அணிமையில் தென் மேற்காய் அமைந்துள்ளது. இதன் கரையில் சூரியேசர் எழுந்தருளியிருக்கிறார்.



அம்மன்கோயில் முகப்பும், சந்திர தீர்த்தமும்

சந்திரதீர்த்தம், அம்மையார் திருச்சந்நிதானத்தில் அமைந்துள்ளது. இத்தீர்த்தத்தின் கீழ்பால் ஆல விருக்ஷத்தினடியில் சோமேசர் எழுந்தருளி இருக்கிறார். இம் முத்தீர்த்தங்களும் முறையே பிரம தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், உருத்திர தீர்த்தம், எனப் பெயர்கள் பெறுவதோடு மூவிலைச் சூலத் தீர்த்தம், தன்ம தீர்த்தம், தான தீர்ததம், முக்குண தீர்த்தம், அகாமுதலான மூவெழுத்தின் தீர்த்தம் எனப் பொதுப் பெயர்களும் பெறும். இன்னும் அநேக தீர்த்தங்கள் கூபவடிவில் உள்ளன. இவையன்றி வெளியே மகதீர்த்தம், சக்கர தீர்த்தம், மணிகர்ணிகை தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்களும் இருக்கின்றன.

## 6 தலவிருக்ஷங்கள்.

வில்வம், வடவால், கொன்றை என மூன்று விருக்ஷங்கள் உள்ளன. **வில்வ விருக்ஷம்** அம்மையார் ஆலயத்தின் அருகில் புதன் கோயிலின் வடபால் பிரம சமாதியில் இருக்கிறது. **வடவால விருக்ஷம்** சந்திர தீர்த்தத்தின் கீழ்பால் தழைத்து

அழகுடன் விளங்குகின்றது. இவ் விருக்ஷத்தினடியில் செய்யப்படும் ஜெப தபம், தானம், பிதிர்க்கடன் முதலியவைகள் மிகுந்த பயனளிக்கும். இக்காலத்தும் அநேக மக்கள் இத்தலத்திற்கு வந்து முக்குள நீராடி இதனடியில் பிதிர்க்கடன் முதலியவைகளைச் செய்து செல்கின்றார்கள். **கொன்றை விருக்ஷம்** அகோர மூர்த்தியின் பின்புறம் இரண்டாவது வடக்குப் பிராகாரத்தில் இருக்கின்றது.

## 7. தலப்பெருமைகள்

"வெண்காடே வெண்காடே என்பீராகில் வீடாத வல்வினையை வீட்டலாமே" என்றார் அப்பமூர்த்திகள். "வெண்காட்டான் என்று உள்ளாடி உருகாதார் உணர்வுடைமை உணரோமே" என்றார் ஆளுடைய பிள்ளையார். காசிக்குச்சமானமான தலங்கள் ஆறனுள் இதுவும் ஒன்று. நவதாண்டவ க்ஷேத்திரங்களுள் முதன்மையானது. புத்திரப்பேற்றை விரும்பிய மக்கள் யாவரும் இங்குவந்து தங்கி முக்குள நீராடி இறைவனை வழிபட்டுச் செல்லும் தகைமையினையுடையது என்பது திருஞானசம்பந்த சுவாமிகளின் அருள்வாக்கு. காவிரி சங்கமஸ்நானம் செய்யச் செல்கின்றவர்கள் ஒவ்வொருவரும் திரும்புங்கால் இங்கு வந்து முக்குள நீராடி வழிபட்டுச்செல்வது இன்றும் காணக்கூடிய ஓர் தனிச்சிறப்பாகும்.

**1. அகோரமூர்த்தி:—** மருத்துவன் என்னும் அசுரன் தேவர்களுக்கு இடர்செய்தானாக, தேவர்கள் யாவரும் இறைவனிடத்தில் விண்ணப்பித்து அவன் கட்டளைப்படியே இத்தலத்திற்கு வந்து வேற்று வடிவங்கொண்டு தவம் புரிந்தார்கள். தேடியும் தேவர்களைக்காணாத மருத்துவன் உண்மையறிந்து இத்தலத்திற்கு வந்து போர் செய்யத் தலைப்பட்டான். கருணாமூர்த்தியாகிய சுவேதவனப்பெருமான் ஏவலினால் இடபதேவர் எதிர்த்துப் போர் செய்தார். மருத்துவன் போருக்குத்தோற்று இறைவனைக் குறித்துத் தவஞ்செய்து, ஓர் சூலாயுதம் பெற்று மீண்டும் இத்தலத்திற்கு வந்து போர்செய்ய முற்பட்டு இடபதேவர்மீது அச்சூலாயுதத்தை ஏவினான். அது இடபதேவரது கொம்புகளை

முறித்துக் காதுகளேயும் அறுத்தது* இடபதேவரும் சிவபெருமானல் கொடுத்தருளப்பட்ட சூலாயுதத்திற்கு அஞ்சி ஓடிச் சுவேதவனப் பெருமானிடம் சென்று விண்ணப்பித்தனர். சுவேதவனப்பெருமான் மருத்துவன்மீது பெருங் கோபங்கொண்டருளினர். உடனே அக் கோபம் எதிர்தோன்ற இறைவனும் அவனே நோக்கி "மருத்துவனேச் சங்கரித்து வருக" என ஆச்ஞாபித்தார். அக் கோபம் எரிபோலும் சிவந்த குஞ்சியுடன் அகோரவடிவாகி நெற்றிக்கண் அனலேக்கக்க, ஆபரணங்கள் பிரகாசிக்க, கண்டாமாலேயணிந்து, கோரத்தந்தங்கள் விளங்க, துடி, மணி, பலகை, வாள், சூலம், வெண்டலே, கடி என்பவைகளே எட்டுக் கரங்களிலும் தாங்கி, அசுரனேச் சமீபித்தலும் அசுரன் பயந்து ஒளியுருவாகி அகோர மூர்த்தியின் திருவுருவிற் கலந்தனன். அகோர மூர்த்தி தேவர்களது வேண்டுகோட்கிணங்கி நடராஜப் பெருமான் சபையின் வடமேற்குப் பாகத்தில் எழுந்தருளுவாராயினர்.

கருநிறமு மணிமாலே புனேயழகும்
வளேயெயிறும் கவினேச் செய்ய
எரிசிகையும் நுதல்விழியும் நடைக்கோல
இணேயடியும் இலக எட்டுக்
கரநிலவ மணிபலகை வெண்டலேவாள்
கடிதுடியேர் சூல மேற்று
வெருவமருத் துவனேயடர் அகோரசிவன்
துணேப்பதச்சீர் விளம்பு வர்மே. —தலபுராணம்.

2. **மெய்கண்டார் :—** பெண்ணுகடத்தில் வசித்துவந்த அச்சுதகளப்பாளர் என்னும் சைவ வேளாளர், நெடுங்காலம் மக்கட் பேறின்மையினுல் வருந்தித் திருத்துறையூரிலே வசித்து வந்த தமது குலகுருவாகிய சகலாகம பண்டிதர் என்னும் **அருணந்திசிவாசாரியாரிடம்** சென்று தம் கருத்தை விண்ணப்பித்தார். வடமொழி வேதங்களேயும் பன்னிரு திருமுறைகளேயும் நன்கு ஆராய்ந்து தெளிந்த அவ் ஆதிசைவர் திருமுறைகளிடத்

---

* இவ்வடையாளங்களே இன்றும் காணலாம்.

துள்ள பெரும் பற்றினுல் திருமுறைகளை விதிப்படி பூசித்துக் கயிறுசாத்திப் பார்த்தனர்.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ள நினை(வு)
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா வொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாந் தீவினையே.

என்னும் திருப்பாசுரம் அகப்பட்டது. உடனே குரு ஆணைப்படி அச்சுதகளப்பாளர் இத் தலத்திற்கு வந்து நாடோறும் முக்குள நீராடிப் பெருமானையும் அம்மையாரையும் வழிபட்டு வருவாராயினர்.

இறைவன் ஒருநாள் களப்பாளரது கனவிற்றேன்றி "அன்பனே! இப் பிறவியில் மகப்பேறெய்தும் பான்மை நினக்கு இல்லை" என்றருளினர். உடனே களப்பாளர் வணங்கி "பெருமானே! மகப்பேர் அரச மரபுக்கே முக்கியமானது. ஆதலால் அடியேனுக்குப் புத்திரப்பேறு முக்கியமில்லை. ஆனுல் தேவரீர் ஆணைப்படி உமையம்மையாரது திருமுலைப்பாலை அருந்திச் சிவஞானம்பெற்ற ஆளுடைய பிள்ளையாரது திருவாக்கு அடியேன் காரணமாக வழுவுதல் வேண்டுமோ" என்றனர் களப்பாளருக்குத் திருமுறைகளின்மீது ஏற்பட்டுள்ள அன்பை உணர்ந்த இறைவனுர் "அன்பனே! நீ விரும்பியபடி ஞான சம்பந்தன் போன்ற மகவினைப் பெற்று வாழ்தி" என்றருள் புரிந்தார். களப்பாளரும் மனமகிழ்ந்து நித்திய கடன்களிற் றவருது ஒழுகுவாருயினர். அவரது மனைவியாரும் கருவுற்று, பத்துத் திங்கள் கழிந்தவுடன் சைவ சித்தாந்த இளஞ் செஞ்ஞாயிறுகிய ஒரு ஆண்மகவை ஈன்றனர். அப் பிள்ளையின் திருநாமம் சுவேதவனப்பெருமான். இவரே பரஞ்சோதியாரால் சிவஞானேபதேசமும், **மெய்கண்டார்** என்னும் தீக்ஷா நாமமும் பெற்றுத் தமது பிறப்புக்குக் காரணராகவும் குலகுருவாகவும் விளங்கிய அருணந்திசிவாசாரியாரைத் தமது முதல் மாணுக்கராகக்கொண்டு விளங்கிச் **சிவஞானபோதம்** என்னும் சைவசித்தாந்தத் தலைமணி ஞான நூலினை இயற்றியருளினுர். புறச்சந்தான குரவர்களுள் முதல்வாராக வைத்துப் போற்றப்படுபவரும் இவரே.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வோம்

—அருணந்திசிவம்

3. **பட்டினத்தடிகள் :—** பதினோராந் திருமுறை ஆசிரியர்களுள் ஒருவராகிய பட்டினத்தடிகள் இத்தலத்திற்கு வந்து சிவபூசை எழுந்தருளப்பண்ணிக்கொண்டார். இவரது இயற்பெயர் திருவெண்காடர் என்பதாகும். இத் தலத்தின் தென்கிழக்கிலுள்ள திருச்சாய்க்காடு என்னும் தலத்தில் ஆடி மாதத்தில் பட்டினத்தடிகள் திருவிழா பத்துநாள் மிகச் சிறப்பாக இன்றும் கொண்டாடப்படுகிறது.

4. **இந்திரன் :-** விருத்திராசுரனைக் கொன்ற பிரமபாதகம் இந்திரனை விடாது பற்ற இந்திரன் இத்தலத்தையடைந்து முக்குள நீராடிச் சுவேதவனப் பெருமானை வணங்கித் தன் பாதகத்தைப் போக்கிக்கொண்டான்.

5. **சுவேதகேது :—** உத்தாலக முனிவரின் புத்திரரான சுவேதகேது என்பவர் தன் தந்தையார் ஆணைப்படியே சிதம்பரம் சென்று சுவாமிதெரிசனஞ் செய்து கொண்டிருக்குங்கால், தம் வாழ்நாள் எட்டு வயதுடன் முடியுமென்பதை ஞானத்தாலுணர்ந்து காலனைப் புறங்காணும் தலம் திருவெண்காடு என்று அறிந்து, இத்தலத்திற்கு வந்து ஒரு சிவலிங்கம் தாபித்துப் பூசை செய்து கொண்டு வந்தார். எட்டு வயது முடியும் நாள் வந்தவுடன் இயமன் வந்து பாசத்தைப் பூட்டுதலும் சுவேதவனப்பெருமான் வெளிப்பட்டு இயமனுடைய வலிமையை அழித்தார். சுவேத கேதுவும் அத் தலத்திலே சிலநாள் தவஞ்செய்திருந்து இறை வனது திருவடி நீழலடைந்தார்.

**6. வேதராசி;—** பொதி சோறுகொண்டு ஊருக்குச் செல்லும் வேதராசி என்னும் பிராமணன் பொதிசோற்றை ஓர் ஆலமரப்பொந்தில் வைத்தானாக, அதில் உள்ள ஒரு நாகம் தனது விஷத்தை அச்சோற்றினிடத்தே உகுத்தது அது தெரியாத அப்பிராமணன் அச்சோற்றைப் பசியால் வருந்தும் ஒரு பிராமணனுக்கு இட்டுச்சென்றான். சோறு உண்ட வேதியன் விஷந் தலைக்கேறி இறக்க, அப் பிரமகத்தி வேதராசியைப் பற்றியது. பின்னர் உண்மையுணர்ந்த வேதராசி பெரியோர்கள் ஆணைப்படியே பற்பல தலங்களையும் தெரிசித்து வருங்கால் இத்திருவெண்காட்டைக்கண்டான். உடனே பிரமசத்தி இரவியைக்கண்ட இருள் போல் நீங்கிற்று. அவ்வேதியனும் இத்தலத்தை அடைந்து முக்குள நீராடி மும்மூர்த்திகளையும் வணங்கி வருவானாயினன். பின்னொருநாள் அவ்வேதியன் தல எல்லையிலுள்ள வில்வமரத்தில் வில்வமெடுக்குங்கால் இயமதூதர்கள் வந்து பற்ற வாய்விட்டலறினன். அஃது உணர்ந்த இறைவர் மாகாளனை நோக்க, மாகாளன் சங்கத்தை ஊதினன். அவ்வொலியினால் இயமன் தலை உடைந்தது. தூதுவர்கள் மூர்ச்சையற்று வீழ்ந்தார்கள். அவ் வேதியனும் சற்றும் தாமதியாமல் இயமதூதர்களுக்குத் தப்பித் திருக்கோயிலை அடைந்து நெடுநாட் பூசித்திருந்து இறைவன் திருவடி நீழலடைந்தான்.

**7. சுவேதன் :—** இத்தலத்தில் வந்து முக்குள நீராடி, சிவலிங்கம் தாபித்துச் சிவபூசை செய்துகொண்டிருந்து, காலனைப் புறங்கண்டு, சுவேதவனப் பெருமான் அருளால் சிவசாரூபத்தை அடைந்தான்.

**8. ஐராவதம் :—** துருவாசரால் "காட்டானையாகுக" எனச் சாபம்பெற்ற ஐராவதம் சுவேதவனத்தில் திரியுங்கால் மலரெடுத்துச் சென்ற சிவப்பிரிய முனிவரைக்கோட்டினால் குத்த, அக்கோடுகள் முனிவர் மார்பில் அழுந்தாது யானையின் முகத்திலழுந்த உதிரம் பெருகிற்று. சாபத்தோடு நோயும் கொண்ட யானை இத்தலத்தின் வடகிழக்கு மூலையில் ‡ தடாகமமைத்து

‡ யானைமடு என வழங்குகிறது.

அதன் கரையில் ஒரு சிவலிங்கம் தாபித்து வழிபட்டுச் சுவேதா ரண்யேசுவரர் அருளால் விண்ணுலகம் அடைந்தது.

## 8. நித்தியபூசைகளும் திருவிழாக்களும்.

இவ்வாலயத்தில் தினந்தோறும் ஆறுகால பூசைகள் நடை பெறுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்பள்ளி எழுச்சி | காலை | 7-மணி |
| 2. | காலசந்தி | ,, | 10 ,, |
| 3. | உச்சிகாலம் | ,, | 12 ,, |
| 4. | சாயரட்சை | இரவு | 6 ,, |
| 5. | இரண்டாங் காலம் | ,, | $8\frac{1}{2}$ ,, |
| 6. | அர்த்தஜாமம் | ,, | 10 ,, |

ஆண்டு தோறும் மாசித்திங்களில் சுவேதாரண்யேசுவரருக்கு இந்திர மஹோற்சவம் நடைபெற்று வருகிறது.

## இத்தலத்தில் 12-மாதமும் உற்சவங்கள் நடைபெறும்

1 **சித்திரை:–** வருஷப்பிறப்பு உபயக்காரர்கள் அபிஷேக ஆராதனை; ரிஷபவாகனக்காக்ஷி; திருவோணநக்ஷத்திரத்தில் ஸ்ரீ நடராஜர் அபிஷேகம்.

2 **வைகாசி:–** அமாவாசையில் சிவப்பிரியர் மணி கர்ணிகையில் தீர்த்தமாடுதல். வெள்ளை ஆனைக்குத் துர்வாசமுனிவரால் ஏற்பட்ட சாபவிமோசனம்.

3 **ஆனி:–** உத்திரத்தில் ஆனித் திருமஞ்சனமும், ஸ்ரீ நடராஜர் தெரிசனமும்.

4 **ஆடி:–** பட்டினத்தடிகள் சிவபூஜார்த்தமாகத் திரு வெண்காட்டிற்கு எழுந்தருளுதலும், சிவபெருமான் பிக்ஷாடனர் ரூபமாக எழுந்தருளி மணிகர்ணிகையில் தீர்த்தம் கொடுத்தலும், சிவபூசை செய்வித்தலும், இரவு ரிஷபவாகனரூடராய்க் காக்ஷி பளித்தலும் நடைபெறும். ஸ்ரீ பிர்மவித்யாம்பாளுக்கு ஆடிப்

பூர உற்சவம் பத்துநாள் நிகழும். ஆடி அமாவாசையில் சங்கம தீர்த்த விசேஷம்.

**5 ஆவணி:**— சுக்கிலபக்ஷம் சதுர்த்தசியில் ஸ்ரீ நடராஜர் அபிஷேகம். கோகிலாஷ்டமி பெருமாள் சேவை; விநயக சதுர்த்தி; ஆவணி மூலம் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளல்.

**6 புரட்டாசி:**— சுக்கிலபக்ஷம் சதுர்த்தசி ஸ்ரீ நடராஜர் அபிஷேகம், நிறைமணி, தேவேந்திரபூசை. நவராத்திரி உற்சவம் 9-நாள். விஜயதசமியன்று மணி கர்ணிகை தீர்த்தக் கரையில் அம்புபோட குதிரை வாகனத்தில் சுவாமி புறப்பாடு செய்யப்படும். ஒவ்வொருநாளும் சங்கீதக் கச்சேரிகளும், உபன்யாசங்களும் நடைபெறும். அலங்காரங்கள் விசேஷமாக நடைபெறும். மூலஸ்தானத்திற்கு இலக்ஷார்ச்சனை முதல் நாள் ஆரம்பித்து 10-வது நாள் பூர்த்தி.

**7 ஐப்பசி:**— தீபாவளி அசுவதியில், அன்னாபிஷேகம். சுக்கிலபக்ஷம் பிரதமையில் கந்தசஷ்டி உற்சவம். 6-ம்நாள் சஷ்டியில் சூரசம்ஹாரம். மறுநாள் விடையாத்தி உற்சவம்.

**8 கார்த்திகை:**— ஒவ்வொரு பானுவாரமும், 2-வது காலத்தில் ஸ்ரீ அகோரமூர்த்திக்கு உபயக்காரர்களின் அபிஷேகமும் பூசையும்; 3-வது பானுவாரத்தில் மகா ருத்ராபிஷேகமும், விபூதி அலங்காரமும் விசேஷமாய் நடைபெறும். ஒவ்வொரு கார்த்திகைச் சோமவாரத்திலும் சுவேதவனப் பெருமானுக்கு 1008 சங்காபிஷேகம்; இந்திர விமானக்காட்சி; பரணிதீபம்; மறுதினம் திருக்கார்த்திகை உற்சவம்.

**9 மார்கழி:**— தனுர்மாச பூசை. சதய நக்ஷத்திரத்தில் மாணிக்கவாசகர் உற்சவம். அன்றுமுதல் சுவாமி அம்பாளுக்கு டோலோற்சவம். 10-வது நாள் ஆருத்திரையில் ஸ்ரீ நடராஜர் தெரிசனம். திருவாதிரையில் சுவாமி அம்பாள் வீதி வலம் வருதல்.

**10 தை:**— சங்கராந்தி மறுநாள் அம்பாள் சுனு குளிக்க மணிகர்ணிகைக்குப் போய்வருவதும், மாலை சுவாமி குதிரை

வாசனத்தில் எழுந்தருளி பாரிவேட்டைக்குப் போய்வருவதும் நடைபெறும். மஹாசாஸ்த்தா உற்சவம் 10-நாள். மகாகாளிக்கு உற்சவம் 10-நாள்.

**11 மாசி:-** இந்திர மஹோற்சவம். சுக்கிலபக்ஷம் துவா தசி புனர்பூசத்தில் துவஜாரோணகம்.

3-ந் திருநாள்; சுவேதகேது என்பவர் சிவபெருமானைப் பூஜித்து வருங்கால் அன்று 8-வது வயது முடியும் நாள். இயமன் வந்து பாசத்தைப் பூட்டுதலும் சிவபெருமான் இயமனை எரித்தலும் மீட்டும் அருளலும்.

4-ந் திருநாள்; மகம் பௌர்ணமி திதியில் காவிரி சங்கம தீர்த்தம்.

5-ந் திருநாள்; பூரநக்ஷத்திரம் ஸ்ரீ அகோரமூர்த்தி எழுந் தருளுதலும், மருத்துவாசுர சம்ஹாரமும், ரிஷபவாகனகாக்ஷியும்

7-ந் திருநாள்; திருக்கல்யாணமும், புஷ்பப்பல்லக்கு சேவையும்.

8-ந் திருநாள்; பிக்ஷாடனர் உற்சவம்.

9-ந் திருநாள்; திருத்தேர்.

10-ந் திருநாள்; காலை ஸ்ரீ நடராஜப்பெருமான் வீதி உலா காக்ஷியும், முக்குள தீர்த்தம் கொடுத்தலும். சஷ்டி & விசாகத் தில் பஞ்சமூர்த்திகள் ரிஷபவாகன ரூடராய் மணிகர்ணிகை நதியில் தீர்த்தம் கொடுத்தல்.

11-ந் திருநாள்; ஏகாந்தசேவை.

12-ந் திருநாள்; சந்திர புஷ்கரணியில் தெப்ப உற்சவம்.

**12 பங்குனி:-** சுக்கிலபக்ஷம் பிரதமையில் ஸ்ரீ அகோர மூர்த்திக்கு லக்ஷார்ச்சனை ஆரம்பம்; பௌர்ணமி திதி பங்குனி

உத்திரத்தில் பூர்த்தி. அன்று 1008 சங்காபிஷேகமும், ரிஷப வாகனக் காட்சியும். மறுதினம் விடையாத்தி உற்சவம். லக்ஷார்ச்சனை ஒவ்வொரு தினமும் அன்பர்களின் உபயங்களாக நடந்துவருகிறது.

நடராஜமூர்த்திக்குச் சிதம்பரத்தைப்போல ஆறு அபிஷேகங் களும், ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் திருவாதிரையும் சிறப்பாக நடைபெறுகின்றன. அகோரமூர்த்திக்கு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும் நாடோறும் காலசந்தியில் மட்டும் நடக்கும் அபிஷேகம் தவிர இரண்டாங் காலத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் உள்ளன. இதனை **அகோர பூஜை** என்று மக்கள் வழங்குகின்றார்கள். இது இத்தலத்திற்குரிய தனிச் சிறப்பாகும். இவ்வுற்சவங்களைப் பெரும்பாலும் தேவஸ்தான வருவாயிலிருந்தே மிகச்சிறப்பாக நடத்தி வருகின்றார்கள்.

## 9. சுற்றுக் கோயில்கள்

இத்தலத்தின் வீதிகளின் நான்கு மூலைகளிலும் விநாயகர் ஆலயங்கள் இருப்பதோடு தென்மேற்கு மூலையினின்றும் சிறிது தெற்கில் விலங்குதறித்த விநாயகர் ஆலயமும், அவ்வாலயத்திற்கு மேற்கே மாரியம்மன் ஆலயமும் இருக்கின்றன. வடக்குவீதியில் பிடாரி கோயிலும், மேலசந்நதியில் ஐயனார் கோயிலும் இருக்கின்றன. இவைகளுக்கு நித்திய பூஜையும், திருவிழாக்களும் தேவஸ்தான ஆதாவுகொண்டே நடைபெற்று வருகின்றன.

## 10 வழிபட்டோர்கள்.

பிரமன், சந்திரன், சூரியன், அக்னி, இந்திரன், கணபதி, முருகன், சுவேதன், வியாக்கிரபாதர், வேதராசி, சுவேதகேது, ஐராவதம், சிவப்பிரியர், திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள், பட்டினத்தடிகள் முதலிய பல்லோர் இத்தலத்திறைவனை வழிபட்டுப்பேறுபெற்றுள்ளார்கள். திருவெண்ணெய்நல்லூர் அச்சுதகளப்பாளர் மகப்பேற்றை விரும்பி முக்குள நீராடி இறைவனை வழிபட்டு மெய்கண்டார் என்னும் ஞானசூரியனைப்பெற்றார்.

## 11. திருப்பணிகள்

தருமபுர ஆதீனத் திருக்கூட்டத்து அடியார்களுள் மாபாடிய கருத்தாக விளங்கிய ஸ்ரீமத். வெள்ளியம்பலவாணத்தம்பிரான் சுவாமிகள் சிவதலங்கள்தோறும் சென்று செய்த திருப்பணி களுள் இங்குள்ள ஸ்ரீமந் நடராஜப் பெருமான் திருச்சபையும் ஒன்று என்று அவர்கள் வரலாறு அறிவிக்கின்றது.

மிகவும் பழுதடைந்திருந்த ஸ்ரீ பெரியநாயகியம்மையாரின் ஆலயம் 1937-ம் ஆண்டில் தேவகோட்டை தனவைசிய குலத்த வரான திருவாளர், மு. ரும. சுப. சுப்பிரமணியஞ்செட்டியார் அவர்களால் திருப்பணி செய்யத் தொடங்கி, அவர்களது திருக் குமாரர்கள் வெங்கிடாசலஞ்செட்டியார், சுவாமிநாதஞ்செட்டியார் ஆகிய இருபேரன்பர்களாலும் அவ்வாலயம் முழுவதும் கருங்கற் றிருப்பணியாகக் கட்டப்பட்டு 1940-ம் ஆண்டில் மஹா கும்பா பிஷேகமும் மிகச்சிறப்பாக நடத்தப்பெற்றது அப்பொழுதுசுவாமி கோயிலுக்கும் விமானங்கள், மண்டபங்கள் முதலியன புதுப் பித்து, திருமாளிகைப்பத்தி முதலியனவும் செப்பனிட்டு வெள்ளை பூசி, வர்ணச் சித்திரங்களும் எழுதப்பட்டு சுமார் 6000 ரூபாய்க்கு தேவஸ்தானச் செலவில் திருப்பணி செய்யப்பெற்றிருக்கிறது. அச் சித்திரங்களுள் ஒன்று கீழே தரப்பட்டிருக்கிறது.



ஆனந்த தாண்டவம்.

## 12 வருமானமும், கட்டளைகளும்

இக் கோயிலுக்கு 13000 கலம் நெல் வரக்கூடிய சுமார் 756 ஏக்கர் நன்செய் நிலங்களும், பகுதிப்பணம் ரூபாய் 2750

வரக்கூடிய 865 ஏக்கர் புன்செய் நிலங்களும் இருக்கின்றன. ஆண்டு ஒன்றுக்கு வருமானம் சுமார் ரூ. 55000 கிடைக்கும். தேவஸ்தானச் சிப்பந்திகளுக்கும், நித்தியபூசை, ஏறுபடி, திருவிழாக்கள் முதலானவைகளுக்கும் சுமார் ரூபாய் 45000 செலவு ஆகிறது.

செப்பத்தூர், ஸ்ரீ N. K. ராஜகோபாலய்யர் அவர்களின் குடும்பத்தாரால் மாதம் ஒன்றுக்கு சுமார் ரூபாய் 20 செலவில் உச்சிக்காலக் கட்டளையும், பிரதோஷக் கட்டளையும் நடந்து வருகின்றன. பல்லவராயப்பட்டு ஸ்ரீ M. சோமசுந்தரம்பிள்ளை அவர்களின் குடும்பத்தாரால் மாதம் ஒன்றுக்கு சுமார் ரூபாய் 30 செலவில் தேவஸ்தானத்திற்கு வேண்டிய கற்பூரம் கொடுக்கப்பட்டுக் கட்டளையும் நடந்துவருகிறது. இவையன்றிச் சில உபயங்களும் நடை பெற்று வருகின்றன.

## 13 நிர்வாகம்

இந்த தேவஸ்தானம் சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தின் மேற்பார்வைக்குட்பட்டது. 1932-ம் ஆண்டில் இந்த தேவஸ்தானத்தின் நிர்வாகம் நடைபெறவேண்டி போர்டாரால் ஒரு திட்டம் வகுக்கப்பெற்றது. அத் திட்டத்தின்படி டிரஸ்டி ஒருவர், ஆலோசனைக் கமிட்டி மெம்பர்கள் இருவர் ஆக மூவர்களாலும் இக்கோயில் நிர்வாகம் சீர்பெற நடைபெற்று வருகிறது.

## 14 கல்வெட்டுக்கள்

இத் திருக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அதில் அரசாங்கத்தார் 80 கல்வெட்டுக்களைப் படிஎடுத்து A. R. No. 442 to 521 of 1918. என்று பதிவு செய்துள்ளார்கள். முதல் இராஜ இராஜன் கல்வெட்டுக்கள் பலவும், மூன்றும் குலோத்துங்கன் கல்வெட்டுக்கள் பலவும், கங்கைகொண்ட சோழன், இராஜாதிராஜன், விக்கிரமசோழன், முதற் குலோத்துங்கன் முதலியோர்களது கல்வெட்டுக்கள் பலவும், சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன், விக்கிரமபாண்டியன் ஆகிய பாண்டிய மன்னர்கள் கல்வெட்டுக்கள் பலவும், விஜயநகர மன்னர்கள் கல்வெட்டுக்கள் பலவும் காணப்படுகின்றன.

இக் கோயில் "வடகரை நாங்கூர் நாட்டு நாங்கூர் ஸ்ரீ திருவெண்காடுடையதேவர் ஆலயம்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந் நாங்கூர் நாட்டைத் தன்னகத்தே கொண்ட வள நாட்டின் பெயர் இராஜேந்திரசிம்மவளநாடு என்றும், இராஜாதி ராஜவளநாடு என்றும், க்ஷத்திரியசிகாமணி வளநாடென்றும் குறிக்கப்பட்டுள்ளது.

சில கல்வெட்டுக்கள் ஆடவல்லார், பிச்சதேவர், இடபவாகன தேவர் ஆகிய உருவங்களைப் பிரதிட்டை செய்து அதற்கு நிபந்தங்கள் ஏற்படுத்திய செய்தியை அறிவிக்கின்றன. சில கல்வெட்டுக்களிலிருந்து வளத்து வாழ விட்டான்சந்தி, அகளங்கன் சந்தி, குலசேகரத் தொண்டைமான் சந்தி, கலியுகராமன்சந்தி முதலிய சந்திக்கட்டளையின் பெயர்கள் புலப்படுகின்றன. அஷ்டமிவிழா, மாத ஆயில்ய விழா, தனுர்மாத விழா, ஐப்பசி விழா, ஆவணிமூலத் திருவிழா முதலிய திருவிழாக்கள் நடந்தன என்றும், அத்திருவிழாக்களில் எழுந்தருளும் நாயனுருக்குத் திருமுழுக்கு, பெருந்திருவமுது, விழாவைக் காணவரும் சிவயோகிகளுக்குச் சட்டிச்சோறு முதலியனவற்றிற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன என்றும் சில கல்வெட்டுக்களால் அறியலாம்.

சில கல்வெட்டுக்கள் விழாக்காலங்களில் **ஆரியக்கூத்து** நடத்தியதையும், அதற்கென ஆடரங்கு ஒன்று இருந்ததையும், சுந்தரபாண்டியன் பெயரால் தண்ணீர்ப்பந்தர் அமைக்கப்பட்டிருந்ததையும் குறிப்பிடுகின்றன. நித்திய பூஜைக்குக் காவிரிநீர் கொண்டுவருவதற்கும், செங்கழுநீர்த் திருப்பள்ளித்தாமம் கொடுப்பதற்கும், பெரிய பிள்ளையாருக்குப் பால்போனகம் நிவேதிப்பதற்கும், வேத அத்யயனம் செய்வதற்கும், வீதிகளைத் தூய்மையாக்குவதற்கும் நிலங்கள் விடப்பட்டிருந்ததைச் சில கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

சிவத்துரோகம் செய்தவர்களது நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டதையும், திருவெண்காட்டு நங்கை எனச் சிலருக்குப் பெயர்வழங்கி வந்ததையும் சில கல்வெட்டுக்களால் அறியலாம்.

கி. பி. 18-ம் ஆண்டுக் கல்வெட்டு அம்மையார் ஆலயத்தில் திரு மதில்கள் திருப்பணி செய்யப்பட்டதை அறிவிக்கின்றது. இரண்டாம் இராஜாதிராஜன் காலத்திய கல்வெட்டு ஆதுலர்ச்சாலை (ஏழைகட்குச் சோறுபோடுமிடம்) ஒன்று இருந்ததைத் தெரிவிக்கிறது.

சமஸ்கிருத கல்வெட்டு ஒன்று Setu, Vadavur, Chidambaram, Gokarnam, Pampapuri, Svetaranyam, Vatatavi, Sonadri, Kanchi, Srigiri, Kalahasti, Nagari, Kedari, Varanasi, Kailasa என்னும் இவை முக்தித் தலங்கள் என்று குறிப்பிடுகிறது.

## 15. சமயப்பணி

இந்திரமகோற்சவம், நவராத்திரி உற்சவம்போன்ற திருவிழா நாட்களிலும், மற்றைய சிறப்பு நாட்களிலும் பிரசங்க மண்டபத்தில் உலகம்போற்றும் தக்க அறிஞர்களைக் கொண்டும், நல்லிசை வாணர்களைக் கொண்டும் சைவசமயச் சொற்பொழிவுகளும், இன்னிசை நிகழ்ச்சிகளும் நிகழ்த்துவிக்கப்பட்டு வருகின்றன. தல யாத்திரைக்குவரும் மக்கள் தலப்பெருமையை அறிந்து வழிபட்டு உய்யும்பொருட்டுத் தலவரலாற்றுச் சுருக்கமும் தேவஸ்தானச் செலவில் அச்சிட்டு வழங்கப்படுகிறது. இவையன்றி தேவாரப் பாடசாலை ஒன்றும் நிறுவப்பெற்று நடந்துவருகிறது. நூல்நிலையம் ஒன்றும் அமைத்து அதன்வாயிலாக மக்களுக்கு மொழி அறிவும் சமய அறிவும் வளர்க்கப்படுகின்றன. மக்களும் வந்து படித்துப் பயன் அடைகின்றார்கள்.

### க. தேவாரப்பாடசாலை

மாணவர்கள் அறுவர் பயின்று வருகின்றார்கள். சிதம்பரம் தேவாரம் திரு இரத்தினம் பிள்ளை அவர்களைக்கொண்டு தேவார, சமய, இலக்கண, இலக்கிய பாடங்கள் மாணவர்கட்குப் பயிற்றுவிக்கப்படுகின்றன. மாணவர்கள் ஆசிரியருடன் நாடோறும் மாலையில் ஸ்ரீமந் நடராஜப்பெருமான் சந்நிதியில் இன்னிசைக்

கருவிகளுடன் தேவாரபாராயணம் செய்து வருகின்றூர்கள். உற்சவ காலங்களிலும் வீதியுலாவில் பணிபுரிந்து வருகின்றூர்கள். ஆசிரியருக்குச் சம்பளமும் மாணவர்கட்கு உண்டிச் செலவும் தேவஸ்தானத்திலிருந்து கொடுக்கப்பட்டுவருகிறது.

உ. நூல்நிலேயம்

தமிழுணர்ச்சியையும், சைவசமய உண்மைகளேயும் பரப்பும் நோக்கத்தோடு தேவஸ்தான காரியாலய மண்டபத்திலே நூல் நிலேயம் ஒன்றுள்ளது. இதில் பல சைவ சமயப் பெரியோர் களால் இயற்றப்பெற்ற சுமார் 200 புத்தகங்கள் உள்ளன. இத் துடன் சமயம், இலக்கியம், அரசியல் சம்பந்தமான வார, மாத வெளியீடுகளும், தினசரித்தாள்களும் வரவழைக்கப்படுகின்றன.

## 16. கட்டணங்களின் விபரம்

1 ஸ்ரீ அகோரமூர்த்திக்கு விசேஷ அபிஷேக ஆராதனே காலங்களில் உபயக்காரர்கள் கவசம் சாத்துவதற்கு ரூ. 1—0—0.

2 தேஸ்தானத்தில் அபிஷேகத்திற்கு 100-க்கு ரூ 5–0–0 வீதம் கட்டணம் கட்டவேண்டும்.

## 17. தலத்தைப்பற்றிய நூல்கள்

இத் தலத்திற்குத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த மூன்று திருப்பதிகங்களும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த இரண்டு திருப்பதிகங்களும், சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த ஒரு திருப்பதிகமும் ஆக 6 திருப்பதிகங்கள் உள்ளன. மற்றைய திருமுறைகளிலும் ஆங்காங்கே சிற்சில பாடல்கள் காணப்படுகின்றன. காஞ்சிபுரம், சிதம்பரமுனிவர் அருளிச்செய்த க்ஷேத்திரக்கோவைப் பிள்ளேத் தமிழில் இத்தலத்திற்கு ஒரு பாடல் காணப்படுகின்றது. இத் தலத்திற்கு அருகாமையில் தெற்கே 2-கல் தொலேவில் உள்ளதா கிய இராதாநல்லூர் என்னும் சிற்றூரிலே கார்காத்த வேளாளர்

குலத்திலே அவதரித்த சைவ எல்லப்ப நாவலர் என்பவரால் இயற்றப்பட்ட இவ்வூர்த் **தலபுராணம்** ஒன்று உள்ளது. 614 பாடல்கள் கொண்ட 18 சருக்கங்களால் ஆகியது. 1905-ல் அச்சிட்டுள்ள இத் தலபுராணத்தில் இத் தலத்திற்கு அருகாமையில் வடபாலுள்ள பெருந்தோட்டம் திருவாளர், தெ. சி. துரைசாமிப்பிள்ளை அவர்கள் சருக்கந்தோறும் எழுதிய வசனங்கள் சேர்ந்துள்ளன. தற்காலம் இத் தலபுராணம் பல்லோர்க்கும் கற்றறிதற்குக் கிடைக்கப்பெறாமல் மிக அருகி வழங்குகின்றமையால் ஆலய அதிகாரிகள் இப்புராணத்தை இரண்டாவது முறை அச்சிட ஏற்பாடு செய்து வருகின்றார்கள். புராண ஆசிரியரின் கவித்திறனை அன்பர்கள் அறிந்து இன்புறுதற்பொருட்டு அப் புராணத்திலுள்ள சில பாடல்கள் இந் நூலின் இறுதியில் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

பாடல்பெற்ற சிவத்தலங்களில் பெருமானுக்கு தருமபுர ஆதீனச் சார்பில் அபிஷேக ஆராதனைகள் செய்வித்து அவ்வத் தலப்பதிகங்களையும் தனித் தனியே அச்சிடுவித்து ஆங்காங்கு அன்பர்கட்கு வழங்கிவரும் முறையில் **திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள்** என்ற சிறு நூலும் தருமபுர ஆதீன வெளியீடாக அச்சிடப்பெற்று 12—5—46ல் இங்கு வழங்கப்பெற்றது.



உ



## 17 திருப்பாடல்கள்

# திருஞானசம்பந்த சுவாமிகள்

# திருப்பதிகங்கள்

### *1. பண்—சீகாமரம்*

திருச்சிற்றம்பலம்.

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

மண்ணொடுநீர் அனல்காலோ டாகாயம் மதியிரவி
எண்ணில்வரும் இயமானன் இகபரமும் எண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபட வெண் காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்றன்
மேலடர் வெங் காலனுயிர் விண்டபினை நமன் தூதர்
ஆலமிடற் றான் அடியார் என்றடர அஞ்சுவரே 5

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தான் உறைகோயில்
பண்மொழியா லவன்நாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணைமேல் வீற்றிருக்கும் வெண்காடே.

சக்கரமாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானும் அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும் வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம்நன் குடையானும் முக்கணுடை யிறைவனே. 7

பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்தன் றருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே.

கள்ளார்செங் கமலத்தான் கடற்கிடந்தான் எனஇவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி உயர்ந்தாழ்ந்தும் உணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும் மேதகுவெண் காட்டானென்
றுள்ளாடி யுருகாதார் உணர்வுடைமை யுணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்கள் அவர்பிரிமின் அறிவுடையீர் இதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்.

## 2 பண்—காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

உண்டாய் நஞ்சை உமையோர் பங்கா என்றுள்கித்
தொண்டாய்த் திரியும் அடியார் தங்கள் துயரங்கள்
அண்டா வண்ணம் அறுப்பான் எந்தை ஊர்போலும்
வெண்தா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்காடே. 1

நாதன் நம்மை ஆள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியும் அடியார் தங்கள்மேல்
ஏதந் தீர இருந்தான் வாழும் ஊர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே 2

தண்முத் தரும்பத் தடமூன் றுடையான் தனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப உவகை தருவான் ஊர்போலும்
வெண்முத் தருவிப் புனல்வந் தலைக்கும் வெண்காடே. 3

நரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறா உள்கு வார்கள் உள்ளத்தே
கரையா வண்ணங் கண்டான் மேவும் ஊர்போலும்
விரையார் கமலத் தன்னம் மருவும் வெண்காடே. 4

பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்
றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்கள் உறுநோய்கள்
தள்ளிப் போக அருளுந் தலைவன் ஊர்போலும்
வெள்ளைச் சரிசங் குலவித் திரியும் வெண்காடே 5

ஒளிகொள் மேனி யுடையாய் உம்ப ராளீயென்
றளிய ராகி யழுதற் றாறும் அடியார்கட்
கெளியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
வெளிய உருவத் தானை வணங்கும் வெண்காடே. 6

கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்
ஆள்வித் தமரர் உலகம் அளிப்பான் ஊர்போலும்
வேள்விப் புகையால் வானம் இருள்கூர் வெண்காடே. 7

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த இருந்தான் எந்தை ஊர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. 8

கரியா னோடு கமல மலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் என்பார்கட்
குரியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. 9

பாடும் அடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடும் அரவம் அசைத்த பெருமான் அறிவின்றி
மூடம் உடைய சமண்சாக் கியர்கள் உணராத
வேடம் உடைய பெருமான் பதியாம் வெண்காடே. 10

விடையார் கொடியான் மேவி உறையும் வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங் காழியான்
நடையார் இன்சொல் ஞானசம் பந்தன் தமிழ்வல்லார்க்
கடையா வினைகள் அமர லோகம் ஆள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்.

### 3 பண்–காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்.

மந்திரம் மறையவை வானவ ரொடும்
இந்திரன் வழிபட நின்ற எம்இறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமும் முதலுடை அடிக ளல்லரே. 1

படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவணம் உகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. 2

பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தஎம் அடிக ளல்லரே. 3

ஞாழலுஞ் செருந்தியும் நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை யிறைவ ரல்லரே. 4

பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலஇடர் தீர்க்கும் எம்இறை
வேதங்கள் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்கள் தொழநின்ற பரம ரல்லரே. 5

மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் எம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை அடிதொழ அலல வில்லையே. 6

நயந்தவர்க் கருள்பல நல்கி இந்திரன்
கயந்திரம் வழிபட நின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடு மேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7

மலையுடன் எடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுடன் நெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த அடிக ளல்லரே. 8

ஏடவிழ் நறுமலர் அயனும் மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடமு டையவெண் காடு மேவிய
ஆடலை அமர்ந்தஎம் அடிக ளல்லரே. 9

போதியர் பிண்டியர் பொருத்த மில்லிகள்
நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை அடிதொழ அல்ல லில்லையே. 10

நல்லவர் புகலியுள் ஞானசம் பந்தன்
செல்வன்எஞ் சிவனுறை திருவெண் காட்டின்மேற்
சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை அறுத லாணையே. 11

திருச்சிற்றம்பலம்.



# திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பதிகங்கள்

## 1 திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

பண்காட் டிப்படி யாயதன் பத்தர்க்குக்
கண்காட் டிக்கண்ணில் நின்ற மணிஒக்கும்
பெண்காட் டிப்பிறைச் சென்னிவைத் தான்திரு
வெண்காட் டையடைந் துய்ம்மட நெஞ்சமே. 1

கொள்ளி வெந்தழல் வீசிநின் ருடுவார்
ஒள்ளி யகணஞ் சூழுமை பங்கனுர்
வெள்ளி யன்கரி யன்பசு வேறிய
தெள்ளி யன்திரு வெண்கா டடைநெஞ்சே. 2

ஊனேக் குமின்பம் வேண்டி யுழலாதே
வானேக் கும்வழி யாவது நின்மினே
தானேக் குந்தன் னடியவர் நாவினில்
தேனேக் குந்திரு வெண்கா டடைநெஞ்சே. 3

பருவெண் கோட்டுப்பைங் கண்மத வேழத்தின்
உருவங் காட்டிநின் ருனுமை யஞ்சவே
பெருவெண் காட்டிறை வன்னுறை யும்மிடம்
திருவெண் காடடைந் துய்ம்மட நெஞ்சமே. 4

பற்ற வன்கங்கை பாம்பு மதியுடன்
உற்ற வன்சடை யானுயர் ஞானங்கள்
கற்ற வன்கய வர்புர மோரம்பால்
செற்ற வன்திரு வெண்கா டடைநெஞ்சே. 5

கூடி னுனுமை யாளொரு பாகமாய்
வேட னுய்விச யற்கருள் செய்தவன்
சேட னுர்சிவ னுர்சிந்தை மேயவெண்
காட னுரடி யேஅடை நெஞ்சமே. 6

தரித்த வன்கங்கை பாம்பு மதியுடன்
புரித்த புன்சடை யான்கய வர்புரம்
எரித்த வன்மறை நான்கினே டாறங்கம்
விரித்த வன்உறை வெண்கா டடைநெஞ்சே. 7

பட்டம் இண்டை அவைகொடு பத்தர்கள்
சிட்ட னுதியென் றுசிந்தை செய்யவே
நட்ட மூர்த்திஞா னச்சுட ராய்நின்ற
அட்ட மூர்த்திதன் வெண்கா டடைநெஞ்சே. 8

ஏன வேடத்தி னானும் பிரமனும்
தான வேடமுன் தாழ்ந்தறி கின்றிலா
ஞான வேடன் விசயற் கருள்செயுங்
கான வேடன்றன் வெண்கா டடைநெஞ்சே. 9

பாலை யாடுபர் பன்மறை யோதுவர்
சேலை யாடிய கண்ணுமை பங்கனார்
வேலை யார்விட முண்டவெண் காடர்க்கு
மாலை யாவது மாண்டவ ரங்கமே. 10

இராவ ணஞ்செய மாமதி பற்றவை
இராவ ணம்முடை யான்றனை யுள்குமின்
இராவ ணன்றனை யூன்றி யருள்செய்த
இராவ ணன்திரு வெண்கா டடைமினே. 11

திருச்சிற்றம்பலம்.

## 2. திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச்
சூலங்கை யேந்தியோர் சுழல்வாய் நாகம்
பூண்டு பொறி அரவங் காதிற் பெய்து
பொற்சடைக ளவைதாழப் புரிவெண் ணூலர்
நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி
நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சங் கொண்டார்
வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 1

பாதந் தனிப்பார்மேல் வைத்த பாதர்
பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர்
ஏதம் படாவண்ணம் நின்ற பாதர்
ஏழுலகு மாய்நின்ற ஏக பாதர்
ஓதத் தொலிமடங்கி யூருண் டேறி
ஒத்துலக மெல்லா மொடுங் கியபின்
வேதத் தொலிகொண்டு வீணை கேட்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 2

நென்னலைஓர் ஓடேந்திப் பிச்சைக் கென்று
வந்தார்க்கு வந்தேனென் றில்லே புக்கேன்
அந்நிலையே நிற்கின்றார் ஐயங் கொள்ளார்
அருகே வருவார்போல் நோக்கு கின்றார்
நுந்நிலைமை யேதோ? நும் மூர்தான் ஏதோ?
என்றேனுக் கொன்றாகச் சொல்ல மாட்டார்
மென்முலையார் கூடி விரும பி யாடும்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 3

ஆகத் துமையடக்கி யாறு சூடி
ஐவா யரவசைத்தங் கானே றேறிப்
போகம் பலவுடைத்தாய்ப் பூதஞ் சூழப்
புலித்தோ லுடையாப் புகுந்து நின்றார்
பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கிப்
பரிசழித்தென் வளைகவர்ந்தார் பாவி யேனை
மேக முகிலுரிஞ்சு சோலை சூழ்ந்த
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 4

கொள்ளைக் குழைக்காதிற் குண்டைப் பூதங்
கொடுகொட்டி கொட்டிக் குனித்துப் பாட
உள்ளங் கவர்ந்திட்டுப் போவார் போல
உழிதருவர் நான்தெரிய மாட்டேன் மீண்டேன்
கள்ள விழிவிழிப்பர் காணக் கண்ணாற்
கண்ணுளார் போலே கரந்து நிற்பர்
வெள்ளச் சடை முடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 5

தொட்டிலங்கு சூலத்தர் மழுவா ளேந்திச்
சுடர்க்கொன்றைத் தாரணிந்து சுவைகள் பேசிப்
பட்டிவெள் ளேறேறிப் பலியுங் கொள்ளார்
பார்ப்பாரைப் பரிசழிப்பா ரொக்கின் றாராற்
கட்டிலங்கு வெண்ணீற்றர் கனலப் பேசிக்
கருத்தழித்து வளைகவர்ந்தார் காலை மாலை
விட்டிலங்கு சடைமுடியர் வேத நாவர்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 6

பெண்பா லொருபாகம் பேணு வாழ்க்கை
கோள்நாகம் பூண்பனவும் நாணுஞ் சொல்லார்
உண்பார் உறங்குவார் ஒவ்வா நங்காய்
உண்பதுவும் நஞ்சன்றே லோபி யுண்ணார்
பண்பால் விரிசடையர் பற்றி நோக்கிப்
பாலைப் பரிசழியப் பேசு கின்றார்
விண்பால் மதிசூடி வேத மோதி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 7

மருதங்க ளாமொழிவர் மங்கை யோடு
வானவரும் மாலயனுங் கூடித் தங்கள்
சுருதங்க ளால்துதித்துத் தூநீ ராட்டித்
தோத்திரங்கள் பலசொல்லித் தூபங் காட்டிக்
கருதுங்கொல் எம்பெருமான் செய்குற் றேவல்
என்பார்க்கு வேண்டும் வரங்கொ டுத்து
விகிர்தங்க ளாநடப்பர் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 8

புள்ளானும் நான்முகனும் புக்கும் போந்துங்
காணார் பொறியழலாய் நின்றான் தன்னை
உள்ளானை யொன்றலா உருவி னானை
உலகுக் கொருவிளக்காய் நின்றான் தன்னைக்
கள்ளேந்து கொன்றைதூய்க் காலை மூன்றும்
ஓவாமே நின்று தவங்கள் செய்த
வெள்ளானை வேண்டும் வரங்கொ டுப்பார்
வெண்காடு மேவிய விகிர்த னாரே. 9

மாக்குன் றெடுத்தோன் தன் மைந்த னாகி
மாவேழம் வில்லா மதித்தான் தன்னை
நோக்குந் துணைத்தேவ ரெல்லாம் நிற்க
நொடிவரையில் நோவ விழித்தான் தன்னைக்
காக்குங் கடலிலங்கைக் கோமான் தன்னைக்
கதிர்முடியுங் கண்ணும் பிதுங்க வூன்றி
வீக்கந் தவிர்த்த விரலார் போலும்
வெண்காடு மேவிய விகிர்தனாரே. 10

திருச்சிற்றம்பலம்.

## பொது—க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வீழி மிழலைவெண் காடு வேங்கூர்
வேதிகுடி விசய மங்கை வியலூர்
ஆழி அகத்தியான் பள்ளி யண்ணா
மலையாலங் காடும் அரதைப் பெரும்
பாழி பழனம் பனந்தாள் பாதாளம்
பாராய்த்துறை பைஞ்ஞீலி பனங்காட் டூர்தண்
காழி கடல்நாகைக் காரோ ணத்துங்
கயிலாய நாதனையே காண லாமே.

திருச்சிற்றம்பலம்.

## பொது—அடைவு திருத்தர்ண்டகம்

திருச்சிற்றம்பலம்.

மலையார்தம் மகளொடுமா தேவன் சேரும்
மறைக்காடு வண்பொழில்சூழ் தலைச்சங் காடு
தலையாலங் காடுதடங் கடல்சூ ழந்தண்
சாய்க்காடு தள்ளுபுனற் கொள்ளிக் காடு
பலர்பாடும் பழையனூ ராலங் காடு
பனங்காடு பாவையர்கள் பாவம் நீங்க
விலையாம் வளைதிளைக்கக் குடையும் பொய்கை
வெண்காடும் அடையவினை வேறா மன்றே.

திருச்சிற்றம்பலம்.

பொது-பலவகைத் திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

தண்காட்டச் சந்தனமும் தவள நீறுந்
தழையணுகுங் குறுங்கொன்றை மாலை சூடிக்
கண்காட்டக் கருவரைபோ லனைய காஞ்சிக்
கார்மயிலஞ் சாயலார் கலந்து காண
எண்காட்டாக் காடங் கிடமா நின்று
எரிவீசி யிரவாடும் இறைவர் மேய
வெண்காடே வெண்காடே என்பீ ராகில்
வீடாத வல்வினைநோய் வீட்ட லாமே.

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள்

# திருப்பதிகம்



பண்—இந்தளம்

திருச்சிற்றம்பலம்.

படங்கொள்நாகஞ் சென்னிசேர்த்திப்
பாய்புலித்தோ லரையில்வீக்கி
அடங்கலாரூர் எரியச்சீறி
அன்றுமூவர்க் கருள்புரிந்தீர்
மடங்கலானைச் செற்றுகந்தீர்
மனைகள்தோறுந் தலைகையேந்தி
விடங்காகித் திரிவதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே.

இழித்துகந்தீர் முன்னைவேடம்
இமையவர்க்கும் உரைகள்பேணு
தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட
உயர்தவத்தை அமரர்வேண்ட
அழிக்கவந்த காமவேளை
அவனுடைய தாதைகாண
விழித்துகந்த வெற்றியென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 2

படைகளேந்திப் பாரிடமும்
பாதம்போற்ற மாதுநீரும்
உடையோர்கோவ ணத்தராகி
உண்மைசொல்லீர் உம்மையன்றே
சடைகள்தாழக் கரணமிட்டுத்
தன்மைபேசி யில்பலிக்கு
விடையதேறித் திரிவதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 3

பண்ணுளீராய்ப் பாட்டுமானீர்
பத்தர்சித்தம் பாவிக்கொண்டீர்
கண்ணுளீராய்க் கருத்திலும்மைக்
கருதுவார்கள் காணும்வண்ணம்
மண்ணுளீராய் மதியம்வைத்தீர்
வானநாடர் மருவியேத்த
விண்ணுளீராய் நிற்பதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 4

குடமெடுத்து நீரும்பூவுங்
கொண்டுதொண்டர் ஏவல்செய்ய
நடமெடுத்தொன் றாடிப்பாடி
நல்குவீர்நீர் புல்குவண்ணம்
வடமெடுத்த கொங்கைமாதோர்
பாகமாக வார்கடல்வாய்
விடமிடற்றில் வைத்ததென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 5

மாறுபட்ட வனத்தகத்தின்
மருவவந்த வன்களிற்றைப்
பீறியிட்ட மாகப்போர்த்தீர்
பெய்பலிக்கென் றில்லந்தோறுங்
கூறுபட்ட கொடியுநீருங்
குலாவியேற்றை அடாவேறி
வேறுபட்டுத் திரிவதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 6

காதலாலே கருதுந்தொண்டர்
காரணத்த ராகிநின்றே
பூதம்பாடப் புரிந்துநட்டம்
புவனியேத்த ஆடவல்லீர்
நீதியாக ஏழிலோசை
நித்தராகிச் சித்தர்சூழ
வேதமோதித் திரிவதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 7

குரவுகொன்றை மதியமத்தங்
கொங்கைமாதர் கங்கைநாகம்
விரவுகின்ற சடையுடையீர்
விருத்தரானீர் கருத்திலும்மைப்
ப[illegible]மென்மேற் பழிகள்போக்கீர்
பாகமாய மங்கையஞ்சி
வெருவவேழஞ் செற்றதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 8

மாடங்காட்டுங் கச்சியுள்ளீர்
நிச்சயித்தால் நினைப்புளார்பாற்
பாடுங்காட்டி லாடலுள்ளீர்
பரவும்வண்ணம் எங்ஙனேதான்
நாடுங்காட்டில் அயனுமாலும்
நணுகாவண்ணம் அனலுமாய
வேடங்காட்டித் திரிவதென்னே
வேலைசூழ்வெண் காடனீரே. 9

விரித்தவேதம் ஓதவல்லார்
வேலைசூழ்வெண் காடுமேய
விருத்தனாய வேதன்றன்னை
விரிபொழிற்றிரு நாவலூரன்
அருத்தியாலா ரூரன்றொண்டன்
அடியன்கேட்ட மாலைபத்துந்
தெரித்தவண்ண மொழியவல்லார்
செம்மையாளர் வானுளாரே.

திருச்சிற்றம்பலம்

## எட்டாந்திருமுறை

### திருவாசகம்

விருந்தின னாகி வெண்கா டதனில்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்.

### திருக்கோவையார்

வேலன் புகுந்து வெறியா டுகவெண் மறியறுக்க
காலன் புகுந்த வியக்கழல் வைத்தெழில் தில்லைநின்ற
மேலன் புகுந்தென்க ணின்றா னிருந்தவெண் காடனைய
பாலன் புகுந்திப் பரிசினில் சிற்பித்த பண்பினுக்கே.

—மாணிக்கவாசக சுவாமிகள்.

## பதினோராந்திருமுறை

### சிவபெருமான் திருஇரட்டைமணிமாலை

இயலிசை நாடக மாயெழு வேலைக ளாய்வழுவாப்
புயலியல் விண்ணொடு மண்முழு தாய்ப்பொழு தாகிநின்ற
மயிலியன் மாமறைக் காடர்வெண் காடர்வண் தில்லைமல்கு
கயலியல் கண்ணிபங் காரன்பர் சித்தத் தடங்குவரே.

## சிவபெருமான் திருவந்தாதி

இன்றியாம் உற்ற இடரும் இருந்துயரும்
இன்றியாந் தீர்தும் எழில்நெஞ்சே—இன்றியாங்
காட்டாநஞ் சேற்றான் காமருவெண் காட்டான்
காட்டான் அஞ் சேற்றான் கலந்து.

புகலூர் உடையாய் பொறியரவம் பூணி
புகலூர்ப் புனற்சடையெம் பொன்னே—புகலூராய்
வெண்காடா வேலை விடமுண்டாய் வெள்ளேற்றாய்
வெண்காடா என்பேனே நான்.

## திருவிடைமருதூர் மும்மணிக்கோவை

காத்தினில் மாலவன் கண்கொண்டு நின்கழல் போற்றநல்ல
வாத்தினை ஈயும் மருதஅப பாமதி யொன்று மில்லேன்
சிரத்தினு மாயென்றன் சிந்தையு ளாகிவெண் காடனென்னும்
தாத்தினு மாயது நின்னடி யாந்தெய்வத் தாமரையே.

## திருவேகம்பமுடையார் திருவந்தாதி

நினைவார்க் கருளும் பிரான்திருச் சோற்றுத் துறைநியமம்
புனைவார் சடையோன் புகலூர் புறம்பயம் பூவணம்நீர்
புனைவார் பொழில்திரு வெண்காடு பாச்சில் அதிகைஎன்று
நினைவார் நநெஞ்சி னீர்கச்சி ஏகம்பம் நண்ணுமினே.

## திருத்தொண்டர் புராணம்

### சம்பந்தர் புராணம்

பொன்னிதழ்க் கொன்றை வன்னி
புனவிள மதியம் நீடு
சென்னியர் திருவெண் காட்டுத்
திருத்தொண்டர் எதிரே சென்றங்(கு)
இன்னதன் மையர்க ளானார்
எனவொணா மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர்ச் சண்பை யாளும்
மன்னரைக் கொண்டு புக்கார்.

முத்தமிழ் விரகர் தாமும்
முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடுஞ்
சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்
பத்தராம் அடியார் சூழப்
பாமர்கோ யிலைச்சூழ் வந்து
வித்தனார் தம்முன் பெய்தி
நிலமுறத் தொழுது வீழ்ந்தார்.

மெய்ப்பொரு ளாயி னாரை
வெண்காடு மேவி னாரைச்
செப்பரும் பதிக மாலை
கண்காட்டு நுதல்முன் சேர்த்தி
முப்புரஞ் செற்றார் பாதஞ்
சேருமுக் குளமும் பாடி
ஒப்பரு ஞான முண்டார்
உளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார்.

## ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணம்

தேவர்பெரு மான்தன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில். —சேக்கிழார்

## க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

தண்தாளம் எறிதிரைப் பாலாழி சத[illegible]த்
தாமரைச் சிங்காதனந்
தருகற்ப கக்காடு சங்கநிதி பத்மநிதி
தந்திடுஞ் சிந்தாமணி
எண்திசா முசமுடன் சந்த்ரசூ ரியர்பதம்
இந்திரபு ரோகிதர் பதம்
ஈராறு ராசிபதம் மனுமன்னர் தம்பதம்
எண்ணிலா தோர்பதங்கள்
தொண்டுசெயு மன்பருக் கென்றே படை
தோன்றுத்து ணையாமிவன்
தோன்றுந் துணையென்ன முன்னின் [illegible]
திண்ணென்ன ஓடிவந்தால்

அண்டங்கொ டுத்தருள்வ னெங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அவனிபுக ழஞ்சுவேத வனமுறையும் வேலனுடன்
அம்புலீ யாடவாவே. —சிதம்பரமுனிவர்.

## சிவாலய மான்மியக் கோவை

தொய்யின்வெம் முலையார் மையலிற் சிக்கிச்
சூழ்நர கினுக்கிலக் காகிப்
பொய்யனேன் வருந்தல் தக்கதோ அருள்வாய்
பூம்பொழில் சூழும்வெண் காட்டு
மெய்யனே! சுவேதா ரண்ணியேச் சுரனே!
மிளிர்கவின் பெரியநா யகிசேர்
செய்யனே! வெள்ளை யானைபூ சித்த
செல்வமே! கருணைவா ரிதியே!.

—சோமசுந்தர தேசிகர்.

## திருவிசைப்பா

உண்டதே உண்டும் உடுத்ததே உடுத்தும்
அடுத்தடுத் துரைத்ததே உரைத்துங்
கண்டதே கண்டுங் கேட்டதே கேட்டுங்
கழிந்தன கடவநா ளெல்லாம்
விண்டதா மரைமேல் அன்னம்வீற் றிருக்கும்
விழாவரு வீதிவெண் காடா!
அண்டரே காண அம்பலத் தாடும்
ஐயனே! உய்யுமா றருளே.

கோடிய மனத்தால் வாக்கினால் செயலால்
கொடியஐம் புனல்களால் அடியேன்
தேடிய பாவ நரகமுங் கொள்ளா
செய்வதம் புரியினுந் தீரா
வீடிய பிரமர் சிரமெலாங் கவர்ந்த
விழாவரு வீதிவெண் காடா!
ஆடிய பாதா! அம்பலத் தாடும்
ஐயனே! உய்யுமா றருளே.

## சேந்தனுர்க்கு விலங்கு நீங்கவேண்டிப் பாடியது

மத்தளை தயிருண் டானும் மலர்மிசை மன்னினானும்
நித்தலுந் தேடிக் காணு நிமலனே ‡ நீஇன் றேகிச்
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்த னிட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டு ளானே.

—பட்டினத்துப்பிள்ளையார்.

## தனிப்பாடல்

ஊரெலாஞ் சிவலோகம் மணலெலாஞ் சிவலிங்கம்
உயர்மரமெலாந் தெய்வதம்
ஊர்வன பறப்பன நடப்பன கிடப்பன
வும்பரினமாங் குளம்பின்
நீரெலாஞ் சிவதீர்த்தம் நிதியெலாஞ் சங்கநிதி
நெல்லெலாம் அன்னமயமாம்
நினைவெலாஞ் சிவசிந்தை கனவெலாஞ் சிவபோகம்
நித்திரையே லாஞ்சமாதி
காரெலாம் பொழின்மருவு காவிரியி னிருபால்
கலந்துவரு மாலையெனவே
கடலொலியி னொடுசுருதி பகரொலி கலத்தலால்
கயிலாயமெனக் கொண்ட
பேரெலாஞ் சிவகணம் எனப்பொலியும் ஆதலால்
பெரியவெண் காடரென்னப்
பிறைகொள்வார் சடையண்ண லருகின்வா ழுறைமன்னு
பெரியநாயகி யம்மையே.

## தலபுராணம்

### முக்குளப்பெருமை

முச்குளத்திற் படிந்தவர்கள் மூவகையா
மேடணைகள் மூன்றுந் தீர்வர்
முக்குணமுங் கழன்றிடுவர் அதற்கடியா
கியபாச மூன்றுந் தீர்வர்
முக்கடமா உரிபுனைவர் முத்தலைவேல்
பிடிப்பாரா முன்னூ லாவர்
மூக்கணுடை யவர்சூழ முத்தொழிலுந்
தந்தொழிலா முடிப்பர் தாமே.

---

‡ அமல மூர்த்தி எனவும் பாடம்.

அகிலபுவ னங்களெல்லா மொருகோ லோச்சி
ஆளுதற்கு நினைக்கிலந்த அரசுண் டாகும்
பகைமைதவிர்ந் திடநினைத்தாற் பகைமை தீரும்
பாலகரை வேண்டிலந்தப் படியாம் பின்னைத்
தொகைபெறஓர் விடையுண்டாம் இருதாள் உண்டாம்
சுடர்நயன மூன்றுண்டாந் தோள்நான் குண்டாம்
முகவனசம் ஐந்துண்டாம் முடியா றுண்டாம்
முக்குளத்தி லொருபோது மூழ்கு வார்க்கே.

பத்திசெய்யு மடியாரைக் கண்டால் நம்மைப்
பணிவதுபோற் பணிந்துருகும் பரிவுண் டாகும்
சித்தசுத்தி மிகவுண்டாம் நமையெப் போதும்
சிந்தித்துச் சிந்திக்கும் செல்வ முண்டாம்
சுத்தவித்தை முதல்நாத மளவா நீங்கிச்
சுவானுபூ திகமடைந்து தொலைபாச் சீவன்
முத்தரெனு நிலையுண்டாம் திருவெண் காட்டின்
முக்குளத்தி லொருபோது மூழ்கு வார்க்கே.

களித்திடு முக்குளத்தை நெஞ்சால் நினைத்தபேர்
கங்கையிலே மூழ்கிவந்தோர் கதியைச் சேர்வர்
தெளித்தவர்கள் மகாபதத்தை யடைவர் இந்தச்
செழுங்கரைமே லணுவளவு செம்பொன் றானம்
அளித்தவர்கள் நமையடைவர் அளித்து மன்னு
ஆடியபே ரானந்த ஆழி யூடே
குளித்திடுவர் அவையிலொரு துளிநீ ருள்ளே
குடித்திடுவார் தாய்முலைப்பால் குடித்திடாரே.

முக்குளத்தைப் புகழ்ந்தவர்க்குத் தானபலன்
யாகபலன் முழுதுண் டாகும்
முக்குளத்தைத் தொழுதவர்க்கு முப்பொழுதுஞ்
சிவபூசை முடித்த பேறும்
முக்குளத்தை வலம்பிரிந்தால் மூவுலகை
வலப்புரிந்த முழுப்பே றுண்டாம்
முக்குளத்தின் மூழ்கினபேர்க் கொருநயனம்
நடுக்குளத்தின் முளைக்குந் தானே.

---

—சைவஎல்லப்பநாவலர்.

